*Metric system*

*** 177 *Q.*—Sri V. SUBBIAH (on behalf of Sri M. P. Sarathi) :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அரசாங்க ஊழியர் பிரயாணப்படி பற்றிய விதிகளில் தசாம்ச முறை (Metric system) ஏற்படுத்தப்பட்டுள்ளதா ?

(இ) பயணதூரங்களை கிலோமீட்டர்களிலும், பயணத்துக்கான செலவுகளை ரூபாய், நயா பைசாக்களாகவும் கணக்கிட உத்தரவிடப்பட்டுள்ளதா ?

(உ) இல்லையென்றால், எப்போது உத்தரவிடப்படும் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (அ) The Metric System for weights and distances has not been formally adopted in the Madras Travelling Allowance rules. Since the Railways have adopted "Kilometres" and "Kilograms" in their calculation of fares and freight from 1st April 1960, it has been ordered that weights and distances expressed in "Kilograms" and "Kilometres" may be converted into "maunds" and "miles" while preferring Travelling Allowance claims.

(இ) & (உ) Travelling Allowance claims are calculated in terms of rupees and annas and the total claim is then converted into rupees and naye Paise. The receipt of orders from the Government of India regarding the revised rates of Travelling and Daily Allowances in terms of metric system is awaited so as to secure uniformity in rounding-off.

Sri V. SUBBIAH : இன்று இருக்கக்கூடிய நயா பைசா குழப்பத்தோடு கூட தசாம்ச முறையின் காரணமாக ஏகப்பட்ட குழப்பம் ஜனங்களிடையே ஏற்பட்டிருக்கிறது. வீசை, பலம், தோலா இதெல்லாம் எதற்குச் சமம் என்று ஒன்றும் புரியாமல் ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். ஆகையால் இந்த தசாம்ச முறையை மெதுவாக, ஜில்லாவாரியாக, பரீட்சார்த்தமாக அமுலுக்குக் கொண்டு வருவது பற்றி அரசாங்கம் ஆலோசிப்பார்களா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : எந்த மாறுதல் ஏற்பட்டாலும் தற்காலிகமாக குழப்பங்கள் இருப்பதை தவிர்க்க முடியாது. ஆனால் இம்மாதிரி மாறுதல் மூலம் நாம் இப்பொழுது கொஞ்சம் கஷ்டப்பட்டாலும்கூட, இன்னும் 5 வருஷம், 10 வருஷங்களில் இருக்கக்கூடிய நிலைமையிலே பெரிய புரட்சிகரமான முன்னேற்ற மாறுதல் ஏற்படும் என்பதில் சந்தேகம் கிடையாது.

*Radiation medicine*

* 178 *Q.*—Sri T. S. RAMASWAMI (on behalf of Sri K. Sattanatha Karayalar) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether radiation medicine is being used in any of our hospitals;